உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# பொறாமையும் அதனால் விளையும் கேடுகளும்.

பொறாமை யென்பது பிறரது செல்வம் கல்வி கீர்த்தி முதலியவற்றைக் கண்டு சகியாமையாம். சகியாதிருத்தல் தன்னளவில் ஓர் பாவமான செய்வினை மன்றெனினும், பின்விளைவில் வித்துப்போலிருந்து இழிந்த பாவங்களையும் செய்ய ஏவுதலாலும், மனத்தை அசுத்தப்படுத்தி ஆத் மார்த்த ஞானத்தை மறைத்தற்குக் காரணமாகலாலும், - பொறாமையும் மனிதர் அத்தியாவசியகம் விலக்க வேண்டியவற்று ளொன்றாகின்றது. ஆயின், பிறரடைந்திருக்கும் கல்வி செல்வங்களின் மேன்மையைப் போன்ற அல்லது அதினும் மேம்பட்ட பெருமையை நியாயவரம்புகடவாமல், மற்றொருவன் தனது ஊக்கத்தினால் பெறமுயலல் பொறாமையாகாது. அவ்விதம் முயலும் போது தான் லக்ஷியத்தில் குறித்திருப்பவரது அபிவிருத்தி யைத் தடைப்படுத்துவதினால் தான் முன்னேற நினைந்து அதற்கான சதியுபாயங்களைச் சிருட்டித்தால் அநுபவச் செயலாகும். வாழ்க்கை நடையில் தீவிரமாய் முன் செல்வோருடன் சமமாகவேனும் செல்லல் அசாத்தியமே யென்று நம்பிக்கை யிழந்த மனச்சோர்வினால் பொறாமை கொண்டு முன் செல்வோர்களைப் பின்னாலிழுத்து விழுத்த நினைத்தல் இழிந்த குணமாகும். இவ்விதம் சிலர் தமது புத்தி சாதுரியம் காலம் முதலியவற்றைத் தம் எதிரிகள் தம்மினும் மேம்படாதிருக்கும் வண்ணம் சதி சூழ்வதிலேயே துர்விநியோகஞ் செய்வதைப் பலரறிந்திருக்கலாம். அந்தோ ! இவர்கள் தம் வாழ்நாளை இழிந்த வீணாளாக்கிப் பிறரையுந் தம்மைப்போன்ற கதிக் குள்ளாக்கச் செலவிடும் அரியகாலத்தை வேறு நற்பயனுள்ள முயற்சி களில் விரயஞ்செய்து தாமே மேனிலை யெய்தக்கூடாதா? திருவள்ளுவ காயா பொறாமையும் அதனால் விளையும் கேடுகளும். நாயஞர் இவ்விதமானோரைக் குறித்தே போலும் **“அறனாக்கம் வேண் டாதானென்பான், பிறனாக்கம் பேணாதழுக்கறுப்பான்"** எனக் கூறினர்.

மனிதர் பரமார்த்த நிலையெய்துதற்கு ஜீவகாருண்ணியம் எவ்வளவில் முக்கிய சாதனமா யமைந்திருக்கின்றதோ அவ்வளவில், மனிதர் அதோ கதியடைதற்குப் பொறாமை முக்கிய காரணமாகின்றது. பொறாமை என்னும் ஆமையானது ஒருவனது இருதயத்துட் புகுந்துவிடினோ அது அங்கே பல கோர சந்ததிகளைப் பெருக்கி அவனை அழுக்காறு என்னும் ஆற்றின் பாதலத்திற்கே கொண்டு சென்று விடுகின்றது. அதிலாழ்ந்தோரின் இழிந்தகதையையும் அவர்களின் குணக் கேட்டையும் உள்ளவாறெடுத் துரைக்க இவ்வுலகில் பரிபாஷையே கிடையாது. தந்தை தாய் சோதர மாதிய சுற்றத்தவருக் கிடையிற்றானும் இப்பொறாமை சிலபோது புகுந்து அவர்களை நிலைகலக்கி விடுகின்ற தெனில் இதன் கொடுமையைக் கூறுவ தெங்ஙனம்.

இவ்வுலகில் சிலர் ஜீவகாருண்ணியம், பரோபகாரம், தரும சிந்தை யாதிய சற்குணங்களுடையராயும், தமது சத்துருக்கள் தாமும் நன்னிலையடைய வேண்டு மென்று கருதுஞ் சுபாவமுடையராயு மிருக்கின்றார்களல்லவா? இவ்விதமானோர்க்குத் தானும் சிலர் கோபங்கொள்ள யாதொரு காரணமுமின்றி யிருக்கவும், கொடிய தீங்குகள் புரிகின்றார்களே! இதன் காரணமென்னர் பொறாமையே. பிறரது காரியங்களில் தலையிடாமல் தாமும் தம்பாடுமாயிருக்குஞ் சிலரைச் சிலர் அரங்கத்தில் வலிந்திழுத்து அவதூறு செய்கின்றார்களே! இதன் காரண மென்ன? பொறாமையே. வேறு சிலர் “தன் மூக்குப் போனாலும் எதிரிக்குத் துர்ச்சகுனமாயிருந்தாலே போதும்'
என்பதற்கினமான இழிந்த செய்கைகளைச் செய்கின்றனரே! இதன் காரணமென்ன? பொறாமையே. சுருக்கிக் கூறுகில், பொறாமையே இவ்வுலகில் அனேக பாவச்செயல்களுக்கு மூலகாரணமாயிருக்கின்றது. பொறாமையால் விளையுங் கொடிய செயல்களைக் கருதியே நமது, ஆப்தர்கள்,

**“அழுக்காறென வொருபாவி திருச்செற்றுத்**
**தீயுழியுய்த்து விடும்”**

எனவும்,

**"அழுக்காற்றால் நெஞ்சமழுங்கிய புன்மாக்கள்**
**இழுக்காற்றால் இன்பாலமெய்தார் பராபரமே”**

எனவும் கூறியருளினார்கள்.

இனி, ஒருவன் தனது பரமார்த்திக க்ஷேமத்திற்காக மாத்திரம் பொறாமையை விலக்க வேண்டு மென்பதன்று, தனது தேசத்தின் பொது நன்மைக்காகவும் தனது லௌகீக நன்மைக்காகவும் பொறாமைக் கிடங்கொடாதிருக்கக் கடமைப்பட்டிருக்கின்றான். ஒரு தேசத்தார் முக்கியமாய் 'அரசியல் ஆசாரவியல் சமய வியலுக்குரிய மேற் பதவிகளை வகிப்போர்” பொறாமையைத் தம்மனத்துள் நுழையவிடின் அத்தேசத்திற்குப் பலவித கேடுகள் சம்பவிக்கும். எவ்விதமென்னில், அவர்கள் தேசத்தில் உள்ளவாறு விவகார சாதுரிய முடையோரது தகைமைகளைப் பொறாமையால் அங்கீகரியாதுவிடவே அத்தகைமையாளரின் யுத்திசாதுரியங்கள் தேசத்தின் பொது நன்மைக்கு உபயோகமாகாமல் தடைப்படவும், தகுதியற்சேர் 'குரங்கின்கைக் கொள்ளி' போல் தமது அதிகாரத்தைத் தவறாயும் யோகிக்கவும் சந்தர்ப்பமுண்டாகித் தேசத்தின் பொது நன்மைக்கே யீன முண்டாகும்.

நம் தேசம் ஜப்பான் அமரிக்கா முதலிய தேசங்களைப் போலத் தீவிரத்தில் அபிவிருத்தியுறாமல் தடைபட்டதற்கும், தடைபட்டு கொண்டிருப்பதற்கும், நம்மவர் பலரிடத்திலுள்ள பொறாமையும் ஓர் காரணமாகும். நாம் சன்மார்க்க நெறியிற்சிறந்த இருஷிகளின் சந்ததியாரென்று பெருமை பாராட்டுகின்றோம். அவர்களோ பொறாமை முதலிய துர்க்குணங் களைக்களைந்து, சமத்துவத்தில் மனத்தை வைக்கும்படி நமக்குக் கற்பித்திருக்கின்றார்கள். அவர்களது போதனைக்கும் உள்ளக் கருத்துக்கும் மாறாய்ப் பிற்காலத்தில் நம்மனோர் தத்தமக்குள்ளேயே அசூயையும் பொறாமையையும் வளரவிட்டது, அதுகாரணமாய்த்

தம் தேசத்தின் பொது நன்மைக்கே ஈனமுண்டாக்கியதும் உண்டாக்கிக் கொண்டிருப்பதும் கர்மமாகுமா? இவ்விஷயத்தில் நாம் ஐரோபியரிலும் பன்மடங்கு தாழ்ந்தவர்களாய் விட்டோமென்பதை மறுக்க முடியாது.

மேனாட்டார் ஆத்மார்த்த ஞான விஷயங்களில் நம்மினும் தாழ்ந்தவரேயாயினும், பொறாமைக் குணம் அவர்களிடத்தில் பொதுவாய்க் குறைந்தே காசப்படுகிறது. இதன் பயனாய் அவர்கள் லௌகீக விஷயத்தில் நம்மினும் பன் மடங்கு மேம்பட்டிருத்தலைக் கண்கூடா யறிகின்றோம். அத்தேசங்களில் இராசாங்கத்தையியக்கும் பொறுப்புக் கூட, பொது ஜனங்களிலேயே தங்கியிருக்கின்றது. அவர்கள் தமது தலைவர்களையும், அரசியலை நடாத்தும் மந்திரிமாரையும், சிலதேசங்களில் சக்கிரவர்த்தி ஸ்தான த்தை வகிக்குந் தேசாதிபதிகளையும் தாமே தெரிந்து நியமிக்கின்றனரென்சல், அன்னோரிடத்தில் எவ்வளவு ஐக்கியமும் பொறாமையின்மையு மிருச்கவேண்டு மென்பதை ஊகித்துணர்க. அவர்கள் உள்ளவாறு தகுதியுடையோரை அவரவர் தகுதிக்கேற்ற பதவிகளில் வைத்து, தேசத்தின் பொது நன்மையையே முக்கியமாய் நாடுகின்றனர். இயல்பாகவே யொருவன் யுத்தி சாதுரியம் இராசதந்திரம் முதலிய விவகாரங்களில் வல்லவனாயிருப்பின் அவனைப் பொறாமையால் சிறுமைப்படுத்த நினையாமல் மென்மேலும் உயர்ந்த நிலைக்கு வரும்படி ஊக்கப்படுத்துகின்றனர். இங்ஙனங் கூறுவதால் அவர்களெல்லோரும் சிறிதும் பொறாமையற்றவர்க ளெல்லோரும் சிறிதும் பொறாமை யற்றவர்க ளென்பதன்று, தமது சுயசாதியாரிடத்திலேயே அசூயை கொள்ளும் இத்தேசத்தவர் பலரிடத்துள்ள இழிவான பொறாமைக் குணத்திற்கும் மேனாட்டாரிடத்தில் சிறுபான்மையாய்க் காணப்படும் பொறாமைக் குணத்திற்கும் மிகு வித்தியாசமுண்டென்பதே. அங்கும் சாதாரணமாய் ஜனங்கள் உயர்ந்த பதவிகளைத் தாமும் பெற வேண்டுமென்று இயல்பாகவே விரும்புவார்களென்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால், அதுகாரணமாய்த் தம்மினுந் தகுதியுடையாரைச் சிறுமைப்படுத்தித் தாம் தகுதியுடையார் போல் நடிக்கத் துணிபவர் அரிது. இவ்விஷயத்தில் மேனாட்டார் சிறந்தவர்களா யிருத்தலினாலேயே அவர்கள் கிருஷிகம் கைத்தொழில் வியாபாரம் கல்வி முதலியவற்றில் மேம்பட்டோராகி, பல்லாயிரமைல் தூரத்திற்கப்பால் பல வேறுபட்ட சாதியாரை யடக்கியுள்ள தேசங்களிலும் தமது ஆதிக்கத்தையும் இராச்சியத்தையும் நிலைநாட்டிக் கோடிக்கணக்கான சனங்களையும் ஆள இயன்றவர்களானார்கள். தமக்கீனத்தை யுண்டாக்கும் பல வழிகளில் ஐரோப்பியரது மாதிரிகளைப் பின்பற்றும் நம்மவர் பலர், மேற்கூறப்பட்ட நல்விஷயங்களில் அவர்களது மாதிரிகளைப் பின்பற்றல் தகாதா?

நியாயவுரிமைப்படி தமக்குக் கிடைக்கவேண்டிய ஒரு பெருமையை அன்னியரடையச் சகித்தாலும், தம்மவரடையச் சகியார் சிலர். குணசீலம் தரும சிந்தை விவகாரசாதுரியம் முதலிய பெருந்தகைமைகளுடையானொருவன் தனக்குப் பகைவனாய் மாத்திரமிருந்து விடின் அவனிடத்தில் அசூயை கொண்டு அவனுக்குப் பலவித குற்றங்களைக் கூறிப் பொது நன்மைக்குறிய விஷயங்களிற்றலையிடாதபடி

அதைரியப் படுத்திவிடுகின்றனர் சிலர் இவ்விதமானோராலேயே நமது தேசம் மற்றைய தேசங்களைப் போன்ற பெருமையையடையாதிருக்கின்றது.

பொறாமை கொள்வோர் தனித்தனி மனிதரேயாயினும், அவர்களிடத்துள்ள பொறாமையின் பலன்கள் சமட்டிரூபமாய்ச் சேர்ந்து தேசத்தின் பொது நன்மைக்கே தீங்குகளை விளைக்க, அதுகாரணமாய்த் தொடர் வட்டியுடன் பெருகிய தீங்குகள் பின்பும் வியட்டிரூபமாய்ப் பிரிந்து அப்பொறாமையுற்ற தேசத்தினருகே தீய பலன்களையளிக்கின்றது.

ஆகலின், நமது எதிரியேயாயினும் ஒருவனிடத்தில் உயர்வான மனோ பாவமும் அதற்கேற்ற தகைமைகளும் பொருந்தியிருப்பின், நாம் அவனது தகைமைகளை உணர்ந்து மென்மேலும் உற்சாகப்படுத்தி அவனது தகுதிக் கியைந்த தானத்தின் அவனை வைத்து மதித்தல் வேண்டும். அவனது தகைமைகளை யுணர்ந்தும், தேசத்தின் பொதுவான நன்மைக்கு - அவைகள் பிரயோசன மாகாவண்ணம் தடை செய்தலும் உபேட்சை செய்தலும் தவறாகும். உபேட்சை செய்தலே தவறாகும்போது அத்தகைமைகளைப் பொறாமையாற் பிறர்கண் முன் சிறுமைப்படுத்த முயலுதல் பெருந்தவறா மன்றோ? ஆதலால் பொறாமை என்னுங் கொடிய இராக்ஷதன் நம்முள்ளத்தைச் சிறிது சிறிதாய்க் கவரா திருக்கும்படி நாமெல்லாம் எச்சரிக்கையா யிருத்தல் வேண்டும்.

ஞானாகாசம்.

சித்தாந்தம் - 1916 ௵ - நவம்பர் ௴